12th February 1959]

SRI K. SATTANATHA KARAYALAR : ஸார், கன்விக்‌ஷனிலே முடியாமல் இருக்கக்கூடிய வழக்குகளில் போலீஸ் தரப்பிலே கூறக்கூடிய காரணங்கள் என்ன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : முக்கியமாகக் கொலை செய்கிறவர்கள் தகுந்த சாட்சியம் வைத்துக்கொண்டு செய்வதில்லை (சிரிப்பு). அப்படி போலீஸார் இதைப்பற்றிப் பரிசீலனை செய்து, ஆராய்ந்து சாட்சியம் காட்டினாலும், நீதிபதிகள் ஏற்றுக் கொள்ளாமல் இருக்கலாம். ஒரு நீதிபதி ஏற்றுக்கொள்வதை, மற்றொரு நீதிபதி ஏற்றுக்கொள்ள மறுக்கிறார்.

SRI P. G. MANICKAM : ஸார், எந்த ஜில்லாவில் கொலை அதிகமாக இருக்கிறது ? எந்த ஜில்லாவில் குறைவாக இருக்கிறது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதில் முதல் ஸ்தானம் கோயம்புத்தூர் ஜில்லாவிற்கு (சிரிப்பு). கடைசி ஸ்தானம் நீலகிரி ஜில்லாவிற்கு. நீலகிரி ஜில்லா மிகவும் சின்னது. அதற்கடுத்தபடியாக கடைசி ஸ்தானம் செங்கற்பட்டு ஜில்லாவிற்கு (சிரிப்பு).

SRI M. JAGANNATHAN : Sir, if the Coimbatore district is leading the other districts in murderous instincts and criminal propensities, what is the action taken by Government to minimise that in Coimbatore ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I do not admit, Sir, that Coimbatore leads in criminal propensities.

### *Chinese method of cultivation*

* 252 Q.—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Home be pleased to state—

(a) whether there is a proposal to try intensive cultivation of crops by the Chinese method in some parts of the State; and

(b) if so, whether there is any proposal to send persons from this State to China to make an on the spot study?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (a) No, Sir.

(b) Does not arise.

SRI K. SATTANATHA KARAYALAR : ஸார், இந்த சைனீஸ் மெதேடில் 25,000 பவுண்டுக்கும் அதிகமாக ஒரு ஏக்கரில் உற்பத்தி செய்யப்படுவது உண்மைதானா ? இதற்கும் ஜப்பானீஸ் மெதேடுக்கும் உள்ள வித்தியாசம் என்ன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஜப்பானுக்கும் சைனாவுக்கும் போட்டியாக இருக்கலாம். பிரசாரமாக இருக்கலாம். இப்போது ஜப்பானிய முறையைக் கொஞ்சம் மாற்றி இங்கே அனுசரித்து வருகிறோம். பயிர் அடர்த்தியாக இருக்கவேண்டும் என்று இப்போது அனுசரிக்கப்பட்டு வருகிறது.

### *" Atom Bomb " crackers*

* 253 Q.—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Home be pleased to state—

(a) whether the Government are aware that the " Atom Bomb " crackers were exploded in streets and public places during the last Deepavali day in the City; and